Permits for consumption of foreign liquor or Indian made foreign spirits are issued to non-Indians who are not minors, on application. In the case of Indian Citizens, permits are granted only on medical grounds i.e., where the applications are supported by medical certificates from paid Civil Surgeons in Government Hospitals. No medical certificate is however insisted on in the case of renewal of permits, unless the quantity is to be increased. The quantity of liquor allowed to Indians on grounds of health, is fixed in individual cases after taking into account the recommendation in the medical certificates and the personal circumstances of the applicant but subject to a maximum of 4 units per month.

SRI A. A. RASHEED : Sir, is it a fact that in a cold climate more liquor is required to keep the people warm?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no experience about it (Laughter).

*Hospital Employees*

* 1614 *Q.*—SRI K. ANBAZHAGAN (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*)) the steps taken to implement the recommendations of the Madras Pay Commission with regard to the last grade servants in the City Hospitals; and

(*b*) the District Hospitals which have implemented the above recommendations?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) : Yes, Sir, except in a few cases. Expeditious action is being taken to give effect to the revised scales of pay and dearness allowance in these cases also.

SRI K. ANBAZHAGAN : நகர மருத்துவ மனைகளில் பணியாற்றுகிற கடைநிலைச் சிப்பந்திகளுக்கு பல்வேறு குறைகள் இருப்பதை அரசாங்கத்திற்கு தெரிவித்திருக்கிறார்கள். அக்குறைகள் போக்கப்பட்டனவா ? அதே போல், ஊதிய உயர்வு இன்னும் சில இடங்களில் தரப்படவில்லை என்று அமைச்சர் அவர்கள் தெரிவிக்கிறார்கள். எந்தெந்த இடங்களில் தரப்படவில்லை ? தரப்படுவதற்கு என்னென்ன வழி வகைகள் செய்திருக்கிறார்கள்?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது சம்பள விகிதத்தை உயர்த்துவது பற்றியது. இது கொஞ்சம் பேர்களுக்குத்தான் கொடுக்கப்படவில்லை. ஸ்டான்லி ஆஸ்பத்திரி, மதறாஸில் ஸ்டான்லி மெடிக்கல் காலேஜ், மதறாஸில்— அட்டெண்டேர்ச் 12, கவர்ன்மெண்ட் கஸ்தூர்பா ஹாஸ்பிடல் ஆம்புலன்ஸ் அட்டெண்டெர்ச் 2, டெய்லர் கூலிஸ், "காப் வாச்மேன்" க்ளீனர் இவர்கள் சம்பளம் நிர்ணயிப்பது, அது மட்டுமல்ல. சிலர் லோக்கல் பண்டில் வேறு ஸ்கெலில் இருந்தார்கள். பேஸிக்பே என்னவென்று விசாரிக்க வேண்டும். அது முடிந்ததும் இவர்களுக்குக் கொடுக்கப்படும்.

19th September 1961]

SRI K. VINAYAKAM : In implementing the recommendations of the Madras Pay Commission with regard to the servants of the Madras City hospitals, will retrospective effect be given from the date on which those recommendations were applied to other Government servants in our State service?

THE HON. SRI M. A. MANICKAVELU : Effect was given from the date from which effect was given to other categories of Government servants. Here the question is that in respect of a limited number of people, their pay has not been revised according to the recommendations of the Madras Pay Commission because there has been technical difficulty. Such cases are being looked into and they will be given the increased allowance. As I said earlier, we do not have correct information about their basic pay and all that. That is being looked into.

*Tractors*

* 1615 Q.—SRI V. SUBBIAH ; கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960–61–ல் Hire Purchase System மூலம் ட்ராக்டர்கள் எத்தனை பேருக்குக் கொடுக்கப்பட்டன ?

(இ) 1960–61–ல் எத்தனை ட்ராக்டர்கள் வாடகைக்கு விடப்பட்டன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) 19.

(இ) 61.

SRI V. SUBBIAH : இந்த ட்ராக்டர்களை வாடகைக்கு விடுவதில் ஏக்கருக்கு பத்து ரூபாய்க்கு மேல் இருப்பது ஜாஸ்தி என்று விவசாயிகள் நினைப்பதால் அதைக் குறைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வாடகை நிர்ணயிக்கப் படுவது, லாபமும் கூடாது, நஷ்டமும் கூடாது என்ற முறையில்தான் நிர்ணயிக்கப்படுகிறது. ஆகவே இந்த வாடகையை மேலும் குறைப்பதற்கு இப்பொழுது சர்க்காருக்கு உத்தேசமில்லை.

SRI K. N. PALANISWAMI GOUNDER : இங்கு ரஷ்யன் ட்ராக்டர்கள் வரவழைக்கப்பட்டு அதற்கு ஸ்பெயர் பார்ட்ஸ் கிடைக்காமல் கஷ்டப் பட்டுக்கொண்டிருக்கிறபடியால் ஸிம்ஸன் க்ரூப்பில் செய்யும் ட்ராக்டர்களை, 15 ஹார்ஸ் பவரில் சாதாரண விவசாயிகளுக்கு பயன்படும் முறையில் செய்ய அரசாங்கம் உத்தரவிடுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ரஷ்யன் ட்ராக்டர்களுக்கு ஸ்பெயர் பார்ட்ஸ் இல்லையென்று தெரிவித்தால் அதில் கவனம செலுத்தி ஸ்பெயர் பார்ட்ஸ் கிடைக்கச் செய்யலாம். இப்பொழுதுதான் ஸிம்ஸன் கம்பெனியார் ட்ராக்டர்கள் செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். உடனே அவர்கள் திட்டத்தை மாற்றக்கூடும் என்று நாம் எதிர்பார்ப்பதற் இல்லை.

SRI V. K. KOTHANDARAMAN : மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத் தின் குறிக்கோள் விவசாய அபிவிருத்தி. அப்படியிருக்க நமது ராஜ் யத்தில் விவசாயத்திற்கு ட்ராக்டர்கள் இல்லாமல் பெரியளவு பாதிக்கப் படக்கூடிய நிலையிருக்கிறது. ஆகவே குறைந்தபட்சம் ஒவ்வொரு பஞ்சா யத்து யூனியன் கௌன்சிலும் ஒரு ட்ராக்டராவது கண்டிப்பாக வாங்கவேண்டுமென்ற அடிப்படையில் வாங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கூட்டுறவு ஸ்தாபனங்கள் அவ்வாறு ட்ராக்டர்கள் வைத்துக்கொள்ளவேண்டுமென்று நான் யோசனைக் கூறிக்கொண்டிருக்கிறேன். பஞ்சாயத்து யூனியன்ஸ் அவ்வாறு